இருவர் ஒரு விஷயத்தில் மாறுபடுகிறோம். வக்கீல்களும் அரசியல் வாதிகளும் போலவே கலைஞர்களும் தம்முள் அபிப் பிராயபேதம் கொள்கின்றனர். அடிப்படைத் தத்துவங்களில் எவருக்கும் வேறுபாடு தோன்றுவதில்லை. புலன்களுக்கு எட்டாத தோற்றமும் உண்டு. அத்தகையவற்றின் நுகர்ச்சியில் இருவருக்கு வேற்றுமை காணப்படுவதில்லை. ஏனெனில் பேதத் தைக் காட்டும் கண்கள் அதனைக் காண்பதில்லை; வேற்றுமைப் படுத்துவதையே நோக்கமாகக் கொண்ட காதுகள் அதனைக் கேட்பதில்லை. பயிற்சி பெற்ற மனத்தால் நுகர்கிறோம். அதனை அநுபவிக்க நாம் பழகிக்கொள்ள வேண்டும். அறிந்து கொள்ள வழி தேட வேண்டும். எங்ஙனம் அறிவது? பண்பாடிருந்தா லொழிய ஒருவர் அதை அறிய முடியாது. அழகின் சூழ்வில்லா தவர் பண்பாட்டைப் பெற முடியாது. அவருடைய சூழ்வு அழகாக இருக்க வேண்டுமானால் அவர் பண்பாடுடையவராக வேண்டும். இப்படி இவை ஒன்றையொன்று பிணைந்துள்ளன.

### நாகரிகம்

நாகரிகம் என்பது யாது? கலைகள் நாகரிகத்துக்கு எப் பொழுதேனும் உதவியிருக்கின்றனவா? நாகரிகம் எதை உண் டாக்கியிருக்கின்றது? அது சிறந்த பண்பாட்டை உண்டாக்கி யிருக்கின்றது. எங்கெங்கே நாகரிகம் உயர்ந்துள்ளதோ அங் கங்கே கலைகளும் சிறந்து விளங்கும். கலைகள் ஜீவசத்து; சமூக இயல்பைக் காட்டுவன. "கலைகள் நமக்கு என்ன சாதித்து விட்டன?" என்று ஒருவர் கேட்கலாம். இந்தியா பழங்கால முதல் மகான்களை உண்டாக்கியது; அறிஞர்களைத் தோற்று வித்தது; அறிவின் கருவூலமாகத் திகழ்ந்தது! அத்தகைய இந்தியாவில் இன்று பிணக்கும் பூசலும் கொடுமையும் தலை விரித்துத் தாண்டவமாடுகின்றன! கலையுணர்ச்சி இன்மையே இவ்வளவுக்கும் காரணம். "கலைகள் நமக்கு என்ன சாதித்து விட்டன?" என்று கேட்பதற்குப் பதிலாக, "கலைகள் இல்லா விட்டால் சமூக நிகழ்ச்சிகள் எங்ஙனம் இருக்கும்?" என்று ஒவ் வொருவரும் சிந்தித்துப் பாருங்கள்!

இக்காலத்தில் உலகம் கொடுமை நிறைந்துள்ளது அதனால் எத்தேசத்தாரும் தற்சமயம் நாகரிகம் உடையவர்கள்

என்று நான் நினைக்கவில்லை. ஒரு சமயம் ஜவாஹர்லால் நேரு, 'இந்தியா ஒரு சேற்றுக் குழம்பு' என்று கூறினர். அவர் கூறிய சந்தர்ப்பத்துக்கு அவ்வுருவகம் பொருத்தமானதே. ஆனல்; சேற்றுக் குழம்பு என்று நாம் கவலைப்பட்டுக்கொண்டிருக்க முடியுமா? இச்சேற்றுக் குழம்பில் நல்ல தாமரை மலர் எழக் கூடும் அல்லவா? சேற்றிற் பிறந்த தாமரைபோல் வருங்கால இந்திய வாழ்க்கை விளங்கக்கூடும். பழங்காலப் பெருமை மீளும் நாள் உதயமாகி விட்டது! பழைய இந்தியாவைப் புதுப்பிக்கும் நாள் தோன்றிவிட்டது! கலைகளின் பண்பு அந்த ஆக்க வேலைக்கு உதவி செய்ய வேண்டும். அழகு தேசியத் தோடு இணைப்புண்டு நின்றுவிடுவதன்று. பழங்கால கிரீஸ் தேசத்தை உதாரணமாக எடுத்துக்கொள்வோம். கிரேக்கக் கலைகளை, கிரேக்கருடைய கவிதையை, நாடகத்தை நோக்குங் கால் கிரேக்க நாடு உலகத்துக்கே புது பெருக்கு கொடுத்தது நம் நினைவுக்கு வருகின்றதல்லவா! அங்ஙனம் எந்த நாட்டிலும் சிறந்த கலைகள் ஓங்குமாயின் அந்நாட்டின் பிணிப்புக்குள் மற் றைய நாடுகள் வசமாய்விடும். பல சமூகத்தினர் அன்பு முறை யில் பழக அப்பொழுது வாய்ப்பு ஏற்படும்.

### நவ பழங் கலைகள்

உண்மைக் கலைகளுக்கு ஜாதி மத தேச நிற வேறுபாடுகள் இல்லை; அவை ஆத்மிகமானவை; அடக்கமுள்ளவை; தூய் மையானவை. இத்தகைய இந்தியக் கலைகளை ஆத்மிக வாழ்க் கைக்கு அர்ப்பணம் செய்யவேண்டும். அப்பொழுதுதான் நாம் இந்தியாவுக்கு உண்மைத் தொண்டாற்றினவர் ஆவோம். நம் பழங்கலைகளை உயிர்ப்பிக்காமல் பிறநாடுகளின் மாதிரிகளை இங்கேயும் உண்டாக்க நாம் முயன்றால், இந்தியா ஒரு காலத் திலும் மற்ற தேசங்களின் முன்னிலையில் விளக்கம் பெருது. மற்றொரு சமூகத்தாருக்கு அடிமைகளாக இல்லாதபடி நாம் சுதந்தரத்தைப் பெற்றுவிட்டோம் என்றாலும் அந்நிய நாடு களின் கருத்துக்களுக்கு நாம் அடிமைகளாக இன்னும் இருந்து வரும்வரையில் ஆத்மிக அடிமையிலிருந்து நீங்கினவர்கள் ஆக மாட்டோம். நாளடைவில் நமமுடைய பழந் தூய உணர்ச்சி களை-புதியனவற்றை உண்டாக்கும் சக்திகளை இழந்துவிடு வோம்.

கலையைத் தவிர அதி முக்கியமான காரியம் இல்லை என்று கூற முடியாது. ஒவ்வொரு செயலும் முக்கியமே. கலை கல்வியைவிட முக்கியமானதென்று சொல்ல முடியுமா? ஆனால் உண்மையை நோக்கும்போது கலையின்றிக் கல்வியில்லை. கலையையும் கல்வியையும் தனித்தனியே பிரித்துக் காண்பது இயலாது. ஒருவர் சர்வகலாசாலையில் பல பட்டங்களைப் பெற்றிருக்கலாம். பட்டதாரிகளெல்லாம் பண்பாடுடையவர்கள் என்று சொல்வதற்கில்லை. பண்பாடற்ற பட்டதாரிகள் 'கற்றவர்' ஆவதெப்படி? உண்மைக் கல்வி ஆத்மிகமானது; வாழ்க்கையின் அழகிய நுட்பங்களைக்கண்டு வியக்கக் கூடியது அது. இந்தப் பொருளில் எல்லாரும் கற்றவர்கள் ஆகவேண்டும்.

நம் நாட்டில் பெண்மையினிடம் அழகு இருக்கின்றது. அழகுக்குப் பெண்மையே எடுத்துக்காட்டு. அழகின் உருவைத் திருமகளாகக் கொண்டது இந் நாடு. திருமகள் தாமரையில் உதயமானாள். தாமரை அழகின் சோலை. அத்திருமகள் இன்று எங்கே உள்ளாள்? அவள் கடலில் மூழ்கியிருக்கிறாள். இது நீர்க்கடலுமன்று; பாற்கடலுமன்று. கொடுமைக் கடல் துன்பக்கடல்; துக்கக் கடல். அவளை மீட்டுக்கொண்டு வரும் முயற்சிகள் நாட்டில் நடைபெற வேண்டும். ஒப்புரவு, அன்பு அருள் எங்கும் இவைகள் மலிந்தால் அவ்வழகி தானாக வந்து விடுவாள்.

